REGD. M 4046.

# திராவிடநாடு

விலை அணா 2 ஆண்டுசந்தா ரூ 7 இலங்கை 15 சதம் மலாய்நாடு 12 காசு

மலர் 7 | 6—2—49 | இதழ் 23

## ★ செக்கோஸ்லோவேகியா ★

[சி. என். அண்ணாதுரை]

பதினைந்தாம் நூற்றாண்டின் இறுதிக் காலத்திலே, செக்கோ நாடு மிக உன்னதமான நிலைமையில் இருந்துவந்தது. அந்த நாட்டிலே வாழ்ந்து வந்த செக் ஜாதியினர் ரோஜமுள்ளவர். நாட்டுப் பற்றும் மொழிப்பற்றும் மிகுதியும் கொண்டவர்கள். தங்களுடைய தேசிய உரிமைகளை இழக்க ஒரு சிறிதும் ஒப்பாதவர். அவர்களுடைய போராடும் திறத்தையும், கொள்கைக்காக விட்டுக் கொடுக்காது கிளர்ச்சி செய்யும் மனப்பான்மையையும் வளர்த்த தலைவர்கள் பலர். அவர்களிலே மிக முக்கியமானவர் ஜான்ஹஸ் என்பவராவார். ஜான்ஹஸ் என்பவர் மத சீர்திருத்தவாதி. கத்தோலிக்க குருமார்களின் கொதிப்பையும் எதிர்ப்பையும் பொருட்படுத்தாமல், போப்பாண்டவரின் விரோதத்தையும் ஒரு பொருட்டாக எண்ணாது, மதத்துறையிலே, சீர்திருத்தப்போர் தொடுத்தவர். அந்தக் காலத்தில், கிறிஸ்துமத சீர்திருத்தத்தைத் துவக்கிய, பிராடஸ்டாண்டு பிரிவை, உற்பத்தி செய்த, மார்ட்டின் லூதர் எனும் சீர்திருத்தவாதியைப்போன்றவர் ஜான்ஹஸ். மார்ட்டின் லூதர், எப்படி மக்களின் மனதைக்கவர்ந்தாரோ அதைப் போன்றே ஜான்ஹஸ் மக்களின் அன்பைப் பெற்றார். அவர் வெறும், மத சீர்திருத்தக்காரர் மட்டுமல்ல. நாட்டுப் பற்று அவர் உள்ளத்தில் ததும்பிற்று. மொழிப் பற்றும் அப்படியே. மேலும் அவர் ஒரு ஜனநாயக வாதி. மத சீர்திருத்தம், நாட்டுப்பற்று, மொழிப்பற்று, ஜனநாயகத்தில் ஆர்வம் இவ்வளவும் ஒருங்கு அமையப்பெற்ற ஜான்ஹஸ், ஐரோப்பிய அமைதிக்கே ஒரு வெடிகுண்டு போலக் காணப்பட்டார். 'தர்பார்' ஆட்சிக்காரர், எங்கு பொதுமக்கள், ஜான்ஹஸ் பேச்சைக் கேட்டுக்கொண்டு, ஜனநாயக ஆட்சி நிறுவவேண்டுமென்று கிளர்ச்சி செய்ய ஆரம்பித்துவிடுவார்களோவென அஞ்சினர்.

"எல்லோரும் இந்நாட்டு மன்னர்" என்ற பேச்சின் சக்தி செக்கோ மக்களை, எதற்குமஞ்சாப்போர் வீரர்களாக்கிவிட்டது. ஜான்ஹஸ் செய்து வந்த சண்டமாருதப் பிரசாரம் உருவான பலனைத்தர ஆரம்பித்தது. உடனே, எதிரிகள் தங்கள் படைகளைத் திரட்டினர். போப்பாண்டவருக்குச் சேதி எட்டிற்று. ஜெர்மன் அதிகாரிகளும், ஆஸ்ட்ரிய நாட்டுச் சீமான்களும், கத்தோலிக்க குருமார்களும், ஒன்று கூடி, ஜான்ஹஸை ஒழிக்கத் தீர்மானித்தனர். இதன் பயனாக, இருதரப்பினரும் கைகலக்கவேண்டி வந்தது. ஜான்ஹஸின் சீடர்கள் எதற்கும் தயாராகவே இருந்தனர். போப்பாண்டவர், அந்தக்காலத்தில் விற்றுவந்த 'பாவ மன்னிப்புச்சீட்டு'களைப்பற்றி ஜான்ஹஸ் இயக்கத்தார் மக்களிடம் கூறிப் பெருத்த எதிர்ப்பை உண்டு பண்ணினர். இளைஞர்கள் 'பாப மன்னிப்புச்சீட்டு' விற்றுவந்தவர்களைத் தொல்லைப் படுத்தியும், சீட்டுகளைப் பிடுங்கிக் கொளுத்துவதுமாகவும் இருந்தனர். போப்பின் பிரதிநிதிகள் பாடு வெகு திண்டாட்டமாகிவிட்டது. "ஏதோ ஆபத்து வருகிறது. இதை ஆரம்பத்திலேயே ஒழிக்க வேண்டும்" என எண்ணி 'பாவ மன்னிப்புச் சீட்டு' விற்பனையைத் தடுத்த மூன்று இளைஞர்களைப் பிடித்துப் பலரறியக் கொன்றனர். அந்த மூன்று இளைஞர்களின் கோர முடிவு செக் மக்களின் இரத்தத்தைக் கொதிக்க வைத்தது. சிங்கமெனச் சீறினர் செக் மக்கள். கொடுமைகளைக் களைந்தே தீருவோம் என முழக்கினர். எதற்கும் அஞ்சோம் என எழுந்தனர். அடக்குமுறை அதிகரித்தது. கூடவே கிளர்ச்சியும் பலப்பட்டது. அதிகாரிகள் அட்டகாசம் செய்தனர். கிளர்ச்சிக்காரர் ஆர்ப்பாட்டம் செய்தனர். கொல்லப்பட்ட மூன்று இளைஞர்களைப் புதைக்கக் கிறிஸ்தவ ஆலயத்திற்கு ஊர்வலமாக எடுத்துச் சென்றனர். இந்த ஊர்வலத்தைப் பிராக் நகர மாணவர்களே நடத்தலாயினர்.

போப்பாண்டவர் கோபம் கொண்டார். தனது ஏவலரைத் துன்புறுத்தியமூவர், கொல்லப்பட்டது பிரமாதமென்பது அவரது எண்ணம். உயிர் அவ்வளவு பெரிதல்ல, அதிகாரமே பெரிது என்பது அவரது எண்ணம் போலும்!

உடனே அவர் ஜான்ஹஸ்ஸை ஜாதிப் பிரஷ்டம் செய்துவிட்டார். மூவரைப் புதைக்க ஏற்பாடாகி இருந்த ஆலயத்தை இடித்துத் தரைமட்டமாக்கும்படி "தாக்கீது" அனுப்பினார். போப்பின் உத்தரவை, ஈடுமுனை கொண்டு கிறை

வேற்ற, ஜெர்மன் படைபொன்று வந்தது. ஆனால், ஜான்ஹஸின் ஆட்கள், ஜெர்மனியரை ஓட ஓட அடித்துத் துரத்தினர்.

பார்த்தனர் எதிரிகள்! வாலே நறுக்கிப் பயனில்லை, தலையை அறுப்போம் என முடிவு செய்தனர். பாபம்! கிளர்ச்சியின் ஜீவசக்தியை அவர்கள் உணரவில்லை. அதிகார வர்க்கம் என்றும் இந்தத் தவறையே செய்கிறது. கிளர்ச்சி என்றால், 'எடுதண்டத்தை'' என்பதே அதிகாரவர்க்கத்தின் மந்திரமாக இருந்து வந்திருக்கிறது. ஆனால் அந்த மந்திரம் ஒரு போதும் பயனளிப்பதேயில்லை.

ஜான்ஹஸ், இருக்கும்வரை, இயக்கம் இருக்கும்—கிளர்ச்சி நடக்கும், தங்கள் ஆதிக்கம் கெடும் என எண்ணிய எதிரிகள் சூதாக அவரை வரவழைத்து 1415 ஆண்டு, அவரை நாஸ்திகர்—மதவிரோதி என்று குற்றம் சாட்டி, கொளுத்திக் கொன்றனர்.

ஆம்! சீர்திருத்தம் பேசிய—ஜனநாயக ஆட்சிவேண்டுமெனக்கிளர்ச்சி செய்த, ஜான்ஹஸ் கொளுத்தப்பட்டார். அந்தத்தீ என்ன செய்தது! செக்நாட்டின நிரந்தர ஜோதியாக மாறிவிட்டது.

கட்டி வைத்துக் கொளுத்தப்பட்ட ஜான்ஹஸ் செக் நாட்டின நிரந்தர ஜோதியாக மாறிவிட்டார். அக்கிரமத்தினால் கொண்டவர்கள் இனி நிம்மதியாக வாழலாம் என மனப்பால் குடித்தனர். இனி யார் இருக்கிறார்கள் செக் மக்களைத் தட்டிக்கொடுத்துக் கிளப்பிவிட என்று எண்ணினார்கள். ஜான்ஹஸ் போன்ற தலைவருக்கே இந்தக் கதி ஏற்பட்டதென்றால், சாதாரண மக்களாகிய நாம் அதிகார வர்க்கத்தை எதிர்த்தால் ஒருநொடியில் நசுக்கிப் பொசுக்கப்படுவோம் என்று மக்கள் அச்சத்தால் பீடிக்கப்படுவர் என்பது அதிகாரிகளின் பிதற்றுக்கொள்ளி எண்ணம். அச்சமே தைரியத்தையும், எது வரினும் வருக என்று எதிர்த்திடும் குணத்தையும் கொடுக்கும் என்பதை அவர் அறியார்.

அஞ்சி அஞ்சி, வாழுபவரே, கடைசியில், இனி நாம் அஞ்சவேண்டுவதே வேறொன்றுமில்லை, என்ற முடிவுக்கு வந்துவிடுகின்றனர். அதுகாலை அவர்களுக்கு, என்றுமில்லாத யாருக்குமில்லாத தீரம் வருவதுண்டு.

உலக சரித்திரமே இதற்குச் சான்று; மக்கள் எழுச்சியின் மர்மமும் இதுவே. பெரிய பெரிய ராணுவ பலம் படைத்த சர்க்கார் முறியடிக்கப்பட்டதன் இரகசியமும் இதுவே. பிரஞ்சுப்புரட்சி, ரஷியப் புரட்சி, யாரால் செய்யப்பட்டது? போர் வீரர்களாலா? வீரதீர பராக்கிரமவான்கள் என்று பெயர் வாங்கியவர்களாலா? அல்ல! அல்ல! சாதாரண மக்களால்! போரில் பழக்கமே இல்லாத மக்களால்! ஆயுதங்களை முதன் முதலாக எடுத்த மக்களால்!

அன்று புரட்சி செய்து, மாட மாளிகைகளைத் தூளாக்கி மன்னரையும் அவரது பரிவாரத்தையும் சின்னாபின்னப்படுத்தி, சிறைக் கோட்டத்தைத் தகர்த்தெறிந்து, முடி அரசை ஒரு நொடியில் கவிழ்த்த, பிரஞ்சு மக்கள், அந்தப் புரட்சி வருவதற்கு முன்பு அதிகாரியைக் கண்டால், அரசரின் வேவுகாரரைக்கண்டால், பணக்காரரைப் பார்த்தால், பயந்து, பதுங்கி, ஒதுங்கி, வாழ்ந்து வந்தவர்களே. எதைக்கண்டாலும் அச்சம்! யாரைக்கண்டாலும் அச்சம்! என்ன நேரிடுமோ என்ற அச்சம்!

அவ்வளவு அச்சமும், இனி வேறு வழியில்லை, எதுவரினும் வருக என்ற எண்ணம் உதித்த உடனே, கதிரோன் ஒளி முன்கரையும் கட்டிபட்ட பனியெனக் கரைந்தொழிந்து போயிற்று! கோழைகளும் வீரராயினர், கொற்றவனே கோழையானான்!

ஜார் மன்னனைக் கண்டால் குப்புற விழுவர் ரஷியமக்கள்! அவன் பெயரைக் கேட்டால் கலங்குவர்! அதிகாரிகள் குரல் கேட்டால் கதறுவர்! ஆமைபோல் பதுங்குவர்! ஆடு போல் மந்தை மந்தையாக அதிகாரிகள் அழைத்துச்செல்லும் வழிசெல்வர். அச்சம்! அச்சம்! அவர் தம் வாழ்வு பூராவும் அச்சமே குடி கொண்டிருந்தது. அப்படிப்பட்ட ரஷியர்கள் தான், உலகம் கண்டு திடுக்கிடும் விதத்திலே பொதுவுடைமைப் புரட்சியைச் செய்தனர். அதிகாரியின் நிழலைக்கண்டாலும் நடுக்குற்ற அம்மக்கள், புரட்சி நடத்திய காலத்தில் இரத்த வெள்ளத்தில், நீந்தினர். எங்கிருந்து வந்தது இந்தத் தீரம்! எங்கு போயிற்று அச்சம்! அச்சத்தின் முடிவைத்தாண்டி விட்டனர் அம்மக்கள்! ஆகவே தீரர்களாயினர்!

செக்மக்கள் மட்டும் இந்த உலக இயல்புக்கு மாறுபட்டவரா? ஜான் ஹஸ் இறந்தது, முதலில் அச்சத்தைக் கொடுத்த தென்றாலும், பிறகு தீரத்தையே தந்தது.

கண்களிரண்டிருந்த ஜான்ஹஸ் இறந்துபட்டான்! ஆனால் கண்கள் இரண்டுமில்லாத ஒருபெட்டையன் கிளம்பினான், செக் மக்களைத் தலைமை தாங்கிப் போர் நடத்த. குருட்டுத்தலைவன் அவன்; ஆனால் அவன் உண்டாக்கிய கொந்தளிப்புச் சொல்லுந் தரத்ததன்று.

ஜிஜ்கா என்பது அவனுடைய பெயர்! அந்தக்காலத்தில் கிளம்பிய போர்த்தலைவர்களுள் ஜிஜ்காவே முதன்மையானவன் என்ற பேரைப் பெற்றான். அவன் எந்தப் போர்க்கூடத்தில் பழகி, இந்நிலை பெற்றான்! ''அவசியம்'' என்ற போர்க்கூடத்திலேயே அவன் உழன்றான். யாரைக் கொண்டு படை திரட்டினான்? பாட்டாளி மக்கள்! உழவர்கள்! இவர்களே அவனுக்குக் கிடைத்தனர்! அவர்களின் ஆயுதங்கள் யாவை? வெடிகுண்டா? விஷப்புகையா? பீரங்கியா? துப்பாக்கியா?

அல்ல! அல்ல!! உழவர்களிடம் ஏது இந்த ஆயுதங்கள்! கட்டை, மட்டை, அரிவாள், சம்மட்டி, கோடரி, கொம்பு, இவைகளே அவர்களிடமிருந்த ஆயுதங்கள். இந்தப் படையை திருத்தியமைத்தார் ஜிஜ்கா! இது மிகத் தீரமானபடையாக அவருடைய தலைமையில் மாறிவிட்டது. எங்கும் இந்தப் போர்வீரரின் முழக்கமே கேட்கலாயிற்று. இவர்களைக் கண்டால் எதிரிகள் ஓடலாயினர் புறமுதுகிட்டு. ஓடவே, எதிரிகளுக்குக் குதிரைகள் உதவின. ஐரோப்பிய நாட்டரசர்கள் ஆச்சரியப்பட்டனர். இந்தக் குருட்டுக் கண்ணனின் சேனை அவர்களைக் கலங்க வைத்தது.

ஜெர்மன் நாட்டுச் சிற்றரசர்கள் சீறி எழுந்தனர். எனினும் ஜிஜ்கா முன்னம் சுருண்டு விழுந்தனர். டேனிஷ்நாட்டுப்படைத்தலைவர்களும், ஆங்கில நாட்டவரும் ஜிஜ்காவின் சூறாவளிச் சேனை முன் தலைகாட்ட முடியவில்லை.

ஜெர்மனியின் தெற்குப் பாகம் பூராவும், இவர்களின் முழக்கமே ஒலித்தது. அந்தப் பிரதேச மன்னர்கள், ஜிஜ்காவிற்குப் பயந்து தத்தமது நகரங்களில், கோட்டை கொத்தளங்களை எழுப்பினர்.



ஜிஜ்கா, ஜான்ஹஸைக் கொன்ற கூட்டத்தினருக்குக் குலை நடுக்கம் ஏற்படும்படி செய்துவிட்டான். புயல் ஓய்ந்து விட்டது என்றெண்ணியிருந்தவர்களெல்லாம், ''இதேது அந்தப் புயலைவிட இது கடுமையாக இருக்கிறதே'' என்று எண்ணலாயினர்.

ஜான்ஹஸ் பேசினான், அவனைக் கொன்றோம்! அவனுக்குப் பின் தோன்றிய, இந்த வீரன் ஜிஜ்கா, பேசவில்லை. ஆனால் வாள் கொண்டு வீசுகிறானே, என்றெண்ணி வாடினர் எதிரிகள். அந்தக்காலத்தில் எதிரிகள் அடைந்த வாட்டத்தை நோக்கும்போது ஜிஜ்கா விரும்பியிருந்தால் ஐரோப்பாவிலே தனது ஆதிக்கத்தைக்கூட ஓரளவு நிலை நாட்டி இருந்திருக்க முடியுமெனத் தோன்றுகிறது. எதிரிகளுக்குப் பங்கம் விளைவித்த செக் மக்கள் கோழைகளல்ல என்பதைக் காட்ட வேண்டும் என்ற எண்ணம் ஜிஜ்காவுக்கு இருந்ததே தவிர, நாடு பிடிக்க வேண்டும், அதனை நாம் ஆளவேண்டும் என்ற எண்ணமில்லை. ஆகவேதான் ஜிஜ்காவின் படைகள் புயற்காற்றென நாலு பக்கங்களிலும் சென்று போர்புரிந்தனவே ஒழிய எந்த நாட்டையும் பிடித்து ஆளவில்லை.

வீரருக்கும் ஒரு முடிவுண்டன்றோ? வீரரின் வீரம் மறையா முன்னர் வீரரே மண்ணினின்று மறைந்து விடுகின்றனர். கீர்த்தியுடன் வாழ்ந்து வந்த ஜிஜ்கா திடீரெனப் பிளேக்கினால் இறந்துவிட்டான். செக் மக்களின் தலைவன் மறைந்தான்! படைகளை வெற்றிக் கோட்டம் அழைத்துச் செல்லும் வீரன் மாண்டான். செக் மக்கள் மனம் உடைந்தனர். எதிரிகள் ''பிழைத்தோம்'' என மூச்சு விட்டனர்.

ஆனால், ஜான்ஹஸ் விடுத்தசொல்லம்புகளும், ஜிஜ்கா விடுத்த போர்ப் பொறிகளும், மறைந்துபோகவில்லை. செக் மக்களுக்கு அடுத்தொரு தலைவன் தோன்றியிருந்தால், அந்த நாட்டுச் சரித்திரமே வேறுவிதமாக மாறி இருக்கும். மாற்றார்கள் மனம் குளிர, செக் நாட்டில் உள்நாட்டுக் குழப்பம் உண்டாயிற்று. செக்நாட்டுச்செல்வவான்கள், சதிசெய்பவராயினர். பாமர மக்களை அடக்கி ஒழிக்கலாயினர். இதனால் ஒற்றுமை மாண்டது. ஒற்றுமை போகவே, செக்நாடு நிலைகலங்கி நின்றது. ஜெர்மனியர் தலைதூக்கலாயினர். பழைமைவிரோதிகளின் சல சலப்புப் பலப்பட்டது. நாதியற்ற கூட்டமாயினர் செக்மக்கள். 1520ல ஆஸ்டிரிய நாட்டு ஆப்ஸ்பர்க் பரம்பரையினர், செக் நாட்டு மன்னராயினர். செக் நாட்டவருக்கு, இன்னல் மேல் இன்னல் வந்தது. வீரம் பேசிய செக் மக்கள் விரட்டப்பட்டனர்! தலைவர்கள் நாடு கடத்தப்பட்டனர். ஜான்ஹஸ்செக்மொழியில் மொழி பெயர்த்த பைபிள், கொளுத்தப் பட்டது. செக் செல்வவான்களும் அழிக்கப்பட்டனர். செக் மொழியைப் பேசலாகாது எனக் கடும் சட்டம் ஏற்பட்டது, நாடு போயிற்று! மொழி போயிற்று! செல்வம் அழிந்தது! சீர் குலைந்தது! சுதந்திரம் பறிபோகவே, சுகம் மாய்ந்தது! செக் மக்கள் அடிமைகளாயினர். ஆஸ்டிரிய நாட்டினர், ஆதிக்கம் வளர்ந்தது. அது முதல் மூன்று நூற்றாண்டுகள் வரையில் செக்கோ நாடு, வலுவிழந்து, பொலிவிழந்து, செத்த வாழ்வு வாழ்ந்து வந்தது.

(தொடரும்)

4-ம் பக்கத் தொடர்ச்சி

சன்யாசி—''உனக்குத் தெரியாத விஜயம் உன்னுடைய மனதின் நோக்கம் எனக்குத்தெரியும்.''

எனக்கு ஒன்றும் புரியவில்லை. ஆனால் இதயம் துடித்தது. பிறகு என் காதில் விழாதபடி இருவரும் ஏதோ குசுகுசு வென்று பேசிக் கொண்டார்கள். இருவரும் போய் விட்டார்கள்; இருவரையும் இது வரையில் நான் பார்க்கவே இல்லை. இவ்விருவரையும் பற்றி ஊரெங்கும் என்னென்னமோ பேசிக் கொள்கிறார்கள்.

*

## வள்ளுவன் வகுத்த விவசாய விஞ்ஞானம்

(ஏ. சங்கரலிங்கம்)

இன்றைய இருபதாம் நூற்றாண்டில் உணவுப் பிரச்னை, உலகில் வாழ்பவரை மட்டுமன்று, உலகாள்பவர்களையும் ஒருங்கே பிடித்தாட்டுகின்ற அரியதோர் உயரிய பிரச்சனையாக மாறி விட்டது. மன்னர்களும், மந்திரிகளும், கோடீஸ்வரர்களும், கோவில் நிர்வாகிகளும், பாமரர்களும், பாட்டாளிகளும் கருத்துவேற்றுமையின்றி 'கழனியில கருமம் செய், பயிரிடுவதே பாரில சிறந்தது, உழவுத் தொழிலே உயரியதொழில்' என உறுதிப் படுத்துகின்றனர் இன்று, இங்கிலையில்,

''பொன்னுடிய போதுறை
தேவநுன்செய்
எந்நாடு மிதற்கிணையில்லை
யெனும்
தென்னாடு புவிக்கணியுந்திலக
நன்னாடது நற்றமிழ் நாடதுவே''

என்று தண்டமிழ்ப் புலவர் வர்ணிக்கும் பெருமை வாய்ந்த நம் தமிழ் நாட்டிலே, பண்டை நாளில் பயிரிடும் தொழிலின் நிலையென்னவென இவண் ஆராயவோம்.

இவைக்குரிய ஆதாரங்கள் பண்டை இலக்கியங்களில் பரக்கக் காணலாமாயினும், உழவன் உயரிய நிலையை உருவகப்படுத்தது—உவமைப் படுத்தது உண்மை நிலையை உள்ளவாறு உள்ளங்கைநெல்லிக்கனியெனத் தந்துள்ளான வள்ளுவன். இன்று எடின்பரோ, ஜெர்மனி, அமெரிக்கா போன்ற இடங்களில் ஆராய்ச்சி வல்லுநர்கள், ஆராய்ச்சியின் பயனாலும், விஞ்ஞானத்தின் உதவியாலும் கண்டு பெற்ற ஆய்வு (Experiment) களின் அறிவாலும், அறிவிக்கப்பட்ட தண்ணிய கருத்துக்களைவிடச் சிறந்த உண்மைகளையும், உழவின் உட்பொருளையும் தெள்ளத்தெளியக் காணலாம் பொய்யில் புலவனின் பொருளுரையில்.

மேல் நாட்டறிஞர்கள் உழவுத் தொழிலில், சிறிய முயற்சியால் பெரும் பயனைக்கொடுக்கும் புதிய முறையொன்று கண்டுள்ளனர். அது உரமில்லாமலே உயர்ந்த ஊதியத்தைப் பெறக்கூடியதாயிருக்கின்றது. உரமிடாமல் உழவர்கள் உயர்ந்த ஊதியத்தை எவ்வாறு அடைய இயலுமென ஐயுறலாம்; ஐயுறவது அறிவுடைமையாயினும் ஆராய்ச்சியாலும் ஆய்வுகளாலும் தெளிவுற்றது காண்க.

''பயிர்கட்கு வேண்டிய உணவுப் பொருள்களெல்லாம் எரு, சாம்பல் முதலிய பொருள்களில் தான் அமைந்திருக்கின்றன. இவைகளிலே இருக்கின்ற 'நைட்ரஜன்' 'பாஸ்பரஸ்' 'பொட்டாஷ்' முதலிய உரங்கள் சூரியனிடத்துள்ள வெப்பத்தில் இலபமாக அமைந்து கிடக்கின்றது.

(5-ம் பக்கம் பார்க்க)

# படித்துறையின் கதை

—⊛—

[பட்டுக்கோட்டை சோளசிராசன்]

காவிரி ஆற்றில் ஓரிடத்தில் ஓர் அழகிய படித்துறை இருக்கிறது. வெகுநாளாக நான் அவ்விடத்திற்குப் போய்க்கொண்டிருந்தேன். அதனால், படித்துறையும் நானும் சினேகிதர்களானோம். ஒரு நாளையில் படித்துறை கீழ்க்கண்ட கதையை எனக்குச் சொல்லிற்று:—

நண்பனே! புரட்டாசி மாதத்தில் ஒருநாள் ஆற்றில் தண்ணீர் நிறைய வந்துகொண்டிருந்தது. என்னுடைய பலபடிகள் தண்ணீரில் முழுகிவிட்டன. கரையிலுள்ள மரங்களில் கட்டப் படிட்டிருந்த சிறு படகுகளெல்லாம் வெள்ளத்தில் ஆடி அசைந்து மிதந்து கொண்டிருந்தன. மேற்குக் கோடியில் அடங்கிக்கொண்டிருந்த சூரியனுடைய அழகான பொன் கிரணங்கள் துள்ளி ஓடிக்கொண்டிருக்கும் சின்னஞ்சிறிய அலைகளுடன் விளையாடிக் கொண்டிருந்தன. பெரிய மரங்களில் பறவைகள் கூட்டம் கூட்டமாய்ப் பாட்டுப் பாடிக் குலாவிக் கொண்டிருந்தன.

சன்யாசி ஒருவன் குளிக்க வந்தான். பெண்களெல்லாம் ஜலமெடுத்துப் போக வந்தார்கள். விஜயம் வரும் நேரம் வந்துவிட்டதென நான் மகிழ்ந்தேன். ஆனால் அன்று அவள் வரவில்லை. சுந்தரமும் அம்புஜமும் வந்தார்கள். அவர்கள் விஜயத்தைப் புக்ககத்திற்கு அழைத்துக் கொண்டு போய்விட்டார்களென்று வருத்தப்பட்டார்கள். அந்தோ! விஜயத்தை எங்கேயோ அனுப்பிவிட்டார்களே என்று நான் கண்ணீர் விட்டேன்.

ஆற்றில் வெள்ளம் வடிந்துவிட்டது. அநேக நாட்கள் கடந்துவிட்டமையால் விஜயம் என்னுடைய ஞாபகத்திலிருந்து மறைந்து விட்டாள்.

தோழனே! செத்து இறந்தகால மாகிய சமாதிக்குள் அடக்கம் செய்யப்பட்ட சம்பவங்களை எண்ணிப் பார்க்கும் பொழுது புண்ணிலே கோல் புகுவது போலத் துயரம் புகுந்து என்னைக் கலக்குகிறது. காலப்போக்கில் எவ்வளவு பெரிய மாறுதல் உண்டாகிறது! இங்கு வந்துகொண்டிருந்த பெண்களெல்லாம் தனித்தனி பிரிந்து மறைந்துவிட்டார்கள். சிலர் கலியாணம் செய்துகொண்டு புருஷன் வீட்டுக்குப் போய்விட்டார்கள். சிலர் இறந்துவிட்டார்கள். சிலருக்கு என்ன நேர்ந்ததென்பதே எனக்குத் தெரியாது. பிறகு ஒருவருஷம் சென்றது.

ஒரு நாள் விஜயத்தின் குரலைக் கேட்டு நான் திடுக்கிட்டேன். அவளுடைய கழுத்தில் ஒன்றையும் காணோம். கைகளெல்லாம் மொட்டையாயிருந்தன. காலில் நகைகளே இல்லை—விஜயம் விதவையாகிவிட்டாள். அவளுடைய கொழுநன் வெகு தூரத்திலுள்ள ஓர் ஊரில் உத்தியோகத்தில் அமர்ந்திருந்தான். தனது கணவனை விஜயம் இரண்டொரு தடவைதான் பார்த்திருக்கிறாள். தந்திச் செய்தியே அவளுடைய கணவன் இறந்துவிட்டான் என்று சொல்லிற்று. பாபம்! பதினைந்து வயதுப் பெண்ணாகிய விஜயம் என்ன செய்வாள்? அவளுடைய நகைகளெல்லாம் கழற்றப்பட்டன. அழகிய தலைமயிரும் அலங்கோலப் படுத்தப்பட்டது. அவளுக்கு முன்பிருந்த அலங்காரங்களெல்லாம் சிதைக்கப்பட்டன. கணவன் செய்துபோட்டிருந்த நகைகளையும் பட்டாடைகளையும் அவளுடைய பெற்றோர்கள் பிடுங்கிக் கொண்டார்கள். ஆனால் அவளுடைய இயற்கை அழகைப் பறித்துக் கொள்ள ஒருவராலும் முடியவில்லை.

விஜயம், நாளாக நாளாக இளமையிலும் அழகிலும் வளர்ந்து வந்தாள்! இதை ஒருவரும் கவனிக்கவில்லை. ஏனெனில் வெள்ளைப்புடவை, துக்கரமான அவளுடைய முகம், அடிமைப் படுத்தப்பட்ட அவளுடைய நடை, உடை பாவனைகள் இவைகள் அவளுடைய அழகைக் கொடுமையாய் மூடிவிட்டன.

சில சமயங்களில் அவள் தனியே என்னுடைய மடிமேல் வந்து உட்கார்ந்து கொண்டு பொல்லாத தனது வல்வினையை எண்ணி எண்ணித் தேம்பித் தேம்பி அழுவாள். வழக்கம் போல் தண்ணீர் ஓடிக்கொண்டிருக்கும் ஆற்றின் ஆழத்தில் மரநிழல்கள், அவள் ஒளிந்துக்கொண்டிருப்பதைப் போல் தென்படும். சந்திரனின் நிலவு பால்போல் தழைத்திடும். பூக்களின் வாசனை காற்றில் மிதந்துவரும். துக்கத்தை அறியாத பறவைகள் பாடிக்கொண்டிருக்கும். இவைகளெல்லாம் விஜயத்தின் மனதிற்கு எவ்விதமிருந்தன. சுற்றிலுமுள்ள இயற்கைப் பொருளெல்லாம் அவளுக்குப் பொல்லாத துக்கத்தையே ஞாபகமூட்டின. அவளுடைய பரிதாபகரமான முகத்தைக் கண்டு இரக்கம் காட்ட ஒருவரேனும் அவளுடைய பக்கத்தில் இல்லை. ஆனால் அவளுடைய அழுகுரல் ஆண்டவனின் காதுகளுக்கு எட்டிவிட்டது.

பக்கத்திலுள்ள சிவன் கோவிலுக்கு ஒருநாள் உயரமான—சிவந்த அழகிய மேனியையுடைய பாலிய சன்யாசி ஒருவன் வந்தான். சன்யாசி வந்த செய்தி ஊரில் பரவியது. ஆண்களும் பெண்களும் கூட்டம் கூட்டமாக யோகியைத் தரிசிக்க வந்தார்கள். கொஞ்ச நாளில் சன்யாசியைத் தரிசனம் செய்யவரும் கூட்டம் அதிகமாகிவிட்டது. குழந்தைகள் முதல் விருத்தாப்பியர்கள் வரையில் சன்யாசியைப் புகழ்ந்து கொண்டாடினர்கள். பணங்களையும் பலவித பழங்களையும் பார்க்க வருபவர்கள் சன்யாசியின் காலடியில் கொட்டினர்கள். இளம் பெண்களெல்லாம் பிள்ளைவரம் பெற வந்து காத்துக் கொண்டிருந்தார்கள். சிலர் மந்திர விஷயங்களைப் பற்றிச் சன்யாசியிடம் கலந்துபேசினர்கள், பலர் வியாதி தீர அவனிடம் வந்தார்கள். இவ்விதம் இரண்டொரு மாதம் சென்றது.

சன்யாசி என்னுடைய படியில் உட்கார்ந்து கொண்டு ஜெபம் செய்து கொண்டிருந்தான். இரவு நேரமாகையால் சன்யாசியின் பக்கத்தில் ஒருவருமில்லை. சந்திரன் ஆகாயத்தில் ஏறிவந்தான். சந்திரிகையில் ஆற்றின் தோற்றமும், சன்யாசியின் தோற்றமும் சுற்றியுள்ள மரங்களும் கண்ணைக் கவர்ந்தன. காலடியின் சப்தம் கேட்டுச் சன்யாசி திரும்பிப் பார்த்தான். விஜயம் சன்யாசியை நோக்கி வந்துகொண்டிருந்தாள்.

விஜயம் தலைகுனிந்து கொண்டே "என்னை இவ்விடம் வரச் சொன்னீர்களே!"

(3-ம் பக்கம் பார்க்க)



## வள்ளுவனின் வருத்த

3-ம் பக்கத் தொடர்ச்சி

அந்த 'நைட்ரஜன்' முதலிய உரச் சத்துக்களே பிராணவாயுவானது எடுத்துப் பூமிக்கு வேண்டிய அளவு கொடுக்கின்றது. பூமி எவ்வளவுக்கெவ்வளவு நன்றாகக் காய்கின்றதோ, அவ்வளவுக்கவ்வளவு உரசத்துக்கள் பூமிக்குக் கிடைக்கின்றன. இது ஆய்வுகள் பல ஆற்றி அறிவுகண்ட ஆராய்ச்சியாளர்கள் அறிவித்துக் கூறும் உறுதிமொழி — பகுத்தறிவு பெற்ற விஞ்ஞானிகள் வகுத்தறிந்து விவசாயிகளுக்கு விடுத்த விண்ணப்பம், இன்றைய நாளிலே.

ஆனால், இவ்வுண்மைகளையெல்லாம் சுமார் 2000 ஆண்டுகட்கு முன்னரே தமிழ் நாட்டு விவசாயிகட்கு, ஏன், உலக விவசாயிகட்கும் சேர்த்தே—மிக அழகாய், குறட்பாவில், இரண்டே அடிகளில், ஏழே சீர்களில் எழிலுற எடுத்தியம்பியுள்ளான் தெய்வப் புலவன் திருவள்ளுவன்.

"தொடிப் புழுதி கஃசா
உணக்கிற் பிடித்தெருவும்
வேண்டாது சாலப்படும்"

என்கிறார். அதாவது, ஒருநிலத்தினை உழுபவன் ஒரு பலம் மண் (புழுதி) கால பலம் ஆகும்வரை அதனைக் காயவிடுவானாயின் அந்நிலம் ஒரு பிடி எருக்கூட இல்லாமல் மிகுதியாய் விளையும் என்பதே.

உழவுத்தொழிலை வள்ளுவர் ஐந்து பிரிவாகப் பிரித்துள்ளார். ஆனால், இன்றைய மேல்நாட்டு விவசாய விஞ்ஞானிகள் வள்ளுவர் வரையறுத்த ஐந்து பகுதிகளுடன் கூடுதலாக ஒரு பகுதியையும் சேர்த்துள்ளனர். அது, வித்துக்களை நல்ல முறையில் சேகரிப்பதுவே. இனி வள்ளுவன் வகுத்த ஐவகைப் பிரிவினையைக் காண்போம்.

"ஏரினும் நன்றால் எரு விடுதல்; கட்டபின்
நீரினும் நன்று; அதன் காப்பு"

பயிர்த்தொழில் நிலத்தை மென்மேலும் உழுதல் நல்லதாயினும் உரம் வைத்தல் உழுதலினும் நல்லது. உரம் சிறப்புடையதாயினும் களை பிடுங்குதல் உரம் வைத்தலினும் நல்லது. களையெடுத்தல் நல்லதாயினும் முறையாய் நீர் பாய்ச்சுதல் களையெடுத்தலினும் நன்று. ஏற்ற முறையில் நீர்ப்பாய்ச்சுதல் நல்லதாயினும் அப்பயிரைக் காத்தல் அதனினும் நன்று. எனவே, உழுதல் உரம் வைத்தல், களைபறித்தல், நீர்ப் பாய்ச்சுதல் காத்தல் என்கின்ற 5-பிரிவுகளும் உழவுத் தொழிலாளர்களுக்குத் தேவையெனத் தெரிவிக்கின்றார் தெய்வப் புலவர் திருவள்ளுவனர். இவ்வைந்துவகை பிரிவுகளுடன "வித்துக்களை நல்ல முறையில் சேகரிப்பது" எனும் ஒரு பிரிவைச் சேர்த்துள்ளனர் இன்றைய வல்லுநர்கள். —(தமிழரசு)

### செலவு!

காஷ்மீரில் நடைபெற்ற போர் காரணமாக இராணுவச் செலவுக்கு இந்திய யூனியன் சர்க்கார் 16,00,000—0—0 ரூபாயும், ஒரு பாலம் கட்டுவதற்கு மட்டும் 1,59,82,000-0-0 ரூபாயும் செலவு செய்யப்பட்டிருப்பதாகச் சர்தார்பட்டேல் ஒரு கேள்விக்குப் பதில் அளிக்கையில் கூறினர்.

### வரவு!

சர்க்கார் இரயில்வே மூலம் 1947—48-ல் கிடைத்த வருமானம் முதல் வகுப்பு:— 2,28,27,000-0-0 ரூபாய் என்றும் இரண்டாவது வகுப்பு:— 5,62,11,000—0—0 ரூபாய் என்றும், மூன்றாவதுவகுப்பு 53,28 64,000—0—0 ரூபாய் என்றும் ஒரு கேள்விக்குப் பதில் அளிக்கையில் இரயில் மந்திரி தோழர் சந்தானம் தெரிவித்தார்.

### விபத்து!

1948 ஜூன் மாதத்திற்கும் டிசம்பர் மாதத்திற்கும் இடையில் இரயில்வேயில் இருபத்தொரு விபத்துக்கள் ஏற்பட்டன என்றும், அவற்றில் பதினேரு பிரயாணிகள் வண்டிகளும், பத்து சாமான்கள் ஏற்றிச் செல்லும்வண்டிகளுமென்றும், இந்த விபத்துக்களால் 67 பேர் கொல்லப்பட்டனர் என்றும், 254 பேர் காயமடைந்தனர் என்றும் ஒரு கேள்விக்குப் பதில் அளிக்கையில் தோழர் என். ஜி. அய்யங்கார் குறிப்பிட்டார்.

### தற்கொலை!

திருமங்கலத்தைச் சார்ந்த கே. வெள்ளக்குளம் ஜெமீன்தாரான தோழர் கே. முத்துகருப்பப் பிள்ளை என்பவர் 13—1—48-ல் தனது மூன்று வயதுப் புதல்வனையும் எட்டு மாதப் புதல்வியையும் கிணற்றில் தள்ளிக் கொன்றதோடு தானும் தற்கொலை செய்து கொண்டார். காரணம்: வறுமையும் அதனால் ஏற்பட்ட மனக்கசப்பும் தானாம்.

### உணவு நிலைமை!

சென்னை மாகாணத்துக்கு உணவுப் பொருள் பற்றாக் குறையாக இருப்பதால், இவ்வருஷத்துக்கு மட்டும் பன்னிரண்டு அல்லது பதினான்கு இலட்சம் டன் உணவுப் பொருள்கள் வாங்க உத்தேசித்திருப்பதாக அறிவிக்கப்படுகிறது.

திராவிட நாடு

ஞாயிறு] 6—2—49 [காஞ்சி

## அவர் காட்டிய வழி!

*

தந்நலங்கருதாது பொதுத் தொண்டு புரிந்ததன் காரணமாக உலக உத்தமர் என்ற உயரிய நிலையைப் பெற்ற காந்தியார் மறைந்து ஓர் ஆண்டு நிறைந்து, அவருடைய நினைவின் அறிகுறியாக நாடெங்கும், ஏன், உலகமெங்குமே அவருடைய உழைப்புக்கும் தியாகத்திற்கும் நன்றி செலுத்தும் முறையில் அனைவரும் அவருக்கு வணக்கமும் மரியாதையும் செலுத்தினர். காந்தியார் மறைந்தாலும் அவர் வகுத்த கொள்கைகளும் திட்டங்களும் நம்முன் இருக்கின்றன என்றும், அவற்றை நடைமுறையில் கொண்டுவருவதே நம்முடைய நீங்காக் கடமையாக இருத்தல் வேண்டும் என்றும், அப்போது தான் நாம் அவரை உண்மையாகவே மதித்து அவர் விருப்பப்படி நடக்கிறோம் என்பதாகப் பொருள் கொள்ள முடியுமென்றும் பேசினர். அவருடைய நினைவுநாட் கூட்டத்தில் கலந்துகொண்ட ஒவ்வொரு தலைவரும் இதனை நன்கு வலியுறுத்திப் பேசியுள்ளனர்.

ஒவ்வொருவரும் தத்தம் மனப்போக்கிற் கேற்றபடி அவருடைய ஒப்பற்ற சேவையைப் பாராட்டி, அவர் காட்டியவழி நடக்கவேண்டுமென்பதை விளக்கிப் பேசினர்.

சத்தியத்தைக் கைக்கொள்ள வேண்டும்.

அகிம்சையைக் கடைப்பிடிக்க வேண்டும்.

வெறுப்பவரையும் நேசிக்க வேண்டும்.

பொய்க்குப்பதில் மெய்யேபேச வேண்டும்.

கதர் நூல் நூற்கவேண்டும்.

எளிய வாழ்க்கையை மேற்கொள்ள வேண்டும்.

என்றெல்லாம் அவருடைய கருத்துக்களையும் கொள்கைகளையும்விளக்கிப் பேசினர். நமது மாகாண முதலமைச்சர் அவரை ஒரு அவதார புருஷர் என்று புகழ்ந்து பேசினர். ஆனால் இந்தவிதமான புகழ்மாலையைக் காந்தியார் ஒருபோதும் விரும்பியவரல்ல என்பதை நமது முதலமைச்சர் மறந்து, மற்றவர்களைவிடத்தாம் காந்தியாரிடத்தில் அதிக அன்பும் மதிப்பும் கொண்டிருப்பதாகக் காட்டிக்கொள்வதற்காக ஒருவேளை இவ்விதம் பேசியிருக்கலாம். என்றாலும், அவர் காட்டிய வழி நடப்பவர்கள், அவருடைய வழியை விட்டுத்தவறி நடக்கக்கூடாது என்பதே நமது கருத்தும், மற்றும் அவரைப் பின்பற்றி அவர்வழி நடப்பவர்களின் கருத்துமாகும். ஏனென்றால், காந்தியார், தம்மை அளவு கடந்து புகழ்வதை எப்போதுமே விரும்பியதில்லை.

“என்னிடத்தில் சிறப்பான தெய்வத்தன்மை என்பது ஒன்றும் இல்லை. நான் தீர்க்கதரிசி அல்ல. நான் உண்மையைத்தேடி அலைகிற ஓர் தொண்டனே யாவன்.”

என்று காந்தியார் தம்மைப்பற்றிப் பலதடவை கூறியுள்ளார். எனவே, காந்தியார் விரும்பாத ஒன்றை அவர் மீது சுமத்தி, அதனால் அவருடைய புகழை உயர்த்துவதாக நினைப்பது, அவர் காட்டியவழி நடக்கிறோம் என்று கூறுவதற்கு முற்றிலும் புறம்பான தற்புகழ்ச்சியாகும். காந்தியார் உலகில் ஓர் சிறந்த அறிவாளி. அரசியலில் அற்புதமான புரட்சியைச் செய்தவர். ஆயுதமின்றியே ஆயுதபலம் படைத்த ஆங்கிலேயரை விரட்டியடித்தவர். அவருடைய இடத்துக்கு இனிஒருவர் வர முடியாது என்ற இன்னபிற புகழ்ச்சொற்களையே, அவரில்லாத காலத்தில் அவருக்குக் காட்டும் மரியாதைச் சொற்களாகக் கொள்ளவேண்டும். அங்ஙனமன்றி அவரை ஒரு அவதார புருஷராக்கிக் காட்டுவதை அறிவுடைய உலகம் ஒருபோதும் ஒப்புக்கொள்ளாது — விரும்பாது. இதுவரை, அவதாரபுருஷர்கள் என்று கருதப்பட்டவர்கள் எவரும் உலகுக்குத் தேவையான — அறிவுள்ள எந்தக்காரியத்தையும் செய்ததேயில்லை. அவதார புருஷமகிமை எல்லாம் பூஜை அறைக்குப் பயன்பட்டதேயொழிய, புத்துலக அமைப்புக்குப் பயன்படவே இல்லை. மூடநம்பிக்கைக்கு வழிகோலியதேயன்றி முற்போக்குக்கு வழிகோலவில்லை. ஒழுக்கக்கேட்டிற்கு வழிகாட்டிற்றேயன்றி ஒழுக்கத்தின் உயர்வுக்கு அது பயன்படவில்லை. பொய்யை மெய்யாக்க உதவிற்றேயன்றி, வாய்மைக்கு வழிகோலவில்லை. சுருங்கச் சொல்லவேண்டுமானால், உலகவாழ்க்கைக்குப் பயன்படாதது எதுவோ, அதுவே அவதார புருஷர்களால் செய்யப்பட்டு வந்திருக்கிறது. ஆனால், காந்தியாரின் ஒவ்வொரு செயலும் உலக வாழ்க்கைக்கு இன்றியமையாதனவாகவே இருந்தன. அப்படிப்பட்ட ஒரு உத்தமரை ஆமை வீராக அவதாரப் பட்டியில் சேர்த்துப் பேசுவது அறிவுடைமையாகாது—அவர் காட்டிய வழி நடப்பதாகவும் ஆகாது.

காந்தியார் காட்டிய வழிகளில் நடப்பதாக அவருடைய நினைவு நாட் கொண்டாட்டத்தில் கலந்துகொண்டு உரைத்தவர்கள், அவருடைய உள்ளத்தில் உறுதிக்கொண்டிருந்த ஒரு முக்கியமான திட்டத்தைக் கடைப்பிடித்து நடப்பார்களானால், அதுவே அவருக்குக் காட்டும் அன்பும் மரியாதையும் கடமையுமாகும். என்ன அந்தத் திட்டம்?

“பிறரைச் சுரண்டிச் செல்வம் சேர்க்கும் பணக்காரன் பிறர் வீட்டில் புகுந்து திருடுபவனைவிட எந்தவிதத்திலும் குறைந்த குற்றத்தைச் செய்தவனல்ல. இதில் ஒரே ஒரு வித்யாசம்—பணக்காரன் கௌரவமான போர்வையில், சட்டத்தின் பிடியிலிருந்து தப்பித்துக் கொள்ளுகிறான். ஒருவனுடைய நியாயமான தேவைக்குமேல் செல்வத்தைக் குவித்து வைப்பது திருட்டேயாகும்.”

என்பது காந்தியாரின் கொள்கைகளில் ஒன்றாகும். அவருடைய இந்த விருப்பத்தை நிறைவேற்றி வைப்போம் என்று அவர் காட்டிய வழி நடப்பதாக அவருடைய நினைவு நாளில் உறுதி கூறிய எந்தத் தலைவரும் கூறக்காணோம். ஏன்? ஒருவேளை இது அவர்களுக்கு அவ்வளவு முக்கியமானதாக—உடனடியாகக் கவனிக்கப்படவேண்டிய விஷயமாகத் தோன்றவில்லைப் போலும்! அல்லது பண்டிதநேரு அவர்கள் காந்தியார் நினைவுநாளில்,

“மகாத்மா காந்தி காட்டிய வழியை நாம் கடைப்பிடிப்பதா?



அல்லது மற்றொரு வழியைக் கடைப்பிடிப்பதா? மகாத்மா காந்தி காட்டிய வழியை நாம் எவ்வளவுதூரம் பின்பற்ற முடியும் என்பதையும், இன்றைய சூழ்நிலையில் அந்தவழியை மாற்ற வேண்டியது அவசியந்தானா என்பதையும் நாம் கண்டுபிடிக்க வேண்டியிருக்கிறது. இது ஒரு முக்கியமான விஷயமாகும்.”

என்று கூறியபடி, காந்தியார் காட்டிய வழி நடப்பதில் தடையாக இருக்கும் பலவற்றுள் ஒன்றாக நாம் மேலே குறிப்பிட்ட விஷயமும் சேர்க்கப்பட்டு, அது, பண்டிதநேரு அவர்களால் கண்டுபிடிக்கப்பட வேண்டிய பிரச்னையாக இருப்பதால்தான், இதைப்பற்றி அவர் நினைவு நாளில் யாரும் பேசவில்லைப் போலும்!

இக்கண்டத்தின் முதல்வராக விளங்கும் பண்டிதநேரு அவர்கள், காந்தியார் காட்டிய வழி நடப்பதா அல்லது வேறு வழியைக் கண்டுபிடிப்பதா என்ற ஐயப்பாட்டினைக் காந்தியாரின் நினைவு நாளில் வெளியிட்டிருக்கிறார். ஆனால், அதேபோது, பலர், காந்தியார் காட்டிய வழி நடப்பதே முறை என்று சூளுரைத்துள்ளனர். இந்த இரண்டில் எது நடைமுறைக்கு வருமென்பது இனிப் பொறுத்திருந்து பார்க்க வேண்டிய விஷயமாகும். என்றபோதிலும், நாம் எதிர்பாராத ஒரு பெரிய காரியத்தை நமக்குத் தம்முடைய பெருமுயற்சியால் சாதித்துத் தந்த காந்தியாரின் திட்டங்களில் முக்கியமானவற்றையாவது கடைப்பிடித்து, அவற்றை வெற்றிபெறச் செய்து நடைமுறையில் கொண்டு வருவதுதான், நாம் அவர் காட்டிய வழி நடக்கிறோம் என்பதற்கும், நாம் அவருடைய அரிய சேவையை மறக்கவில்லை என்பதற்கும் அறிகுறியாகும்—நன்றி செலுத்தும் முறையாகும். அங்ஙனமன்றி, அவருடைய திட்டங்களையும் கொள்கைகளையும் காற்றில் பறக்கவிட்டு, அவரை அஞ்சலி செய்வதோ — அவதார புருஷராக்குவதோ அறிவுடைமையாகாது.

காந்தியார் பல திட்டங்களை நம்முன் வைத்துவிட்டுச் சென்றுள்ளார். அவைகளில் முக்கியமானது நாம் மேலே குறிப்பிட்டிருப்பது. அவருடைய திட்டங்களில் இன்னொன்று:—

“கருத்து வேற்றுமை அல்லது மாறுபாடுகள் இருப்பதற்காகப் பகைமை உணர்ச்சி ஏற்படக் கூடாது.”

என்பதாகும். இதனை, அவர் பெற்றுத் தந்த சுயராச்சியத்தை ஆளும் பொறுப்பை ஏற்றுக் கொண்டுள்ளவர்கள் மிகவும் முக்கியமாகக் கவனிக்க வேண்டும். இதனையும் இனிக் கண்டுபிடிக்க வேண்டிய பிரச்னைகளில் ஒன்றாகக் கருதிவிடக்கூடாது. ஒருவருடைய கருத்து இன்னொருவருடைய கருத்துக்கு மாறுபடுகிறதென்ற காரணத்துக்காக அவரை வதைபுரியும் கொடுமையை ஆளவந்தார்கள் கடைப்பிடிக்கக் கூடாதென்பதே காந்தியாரின் வாசகத்தில் அடங்கியிருக்கும் உண்மையாகும். இதனை, ஆளவந்தார்கள் காந்தியார் மறைந்தவுடனேயே மறந்துவிட்டனர். எங்கே கருத்து மாறுபாடு தோன்றினாலும், அங்கே ஆளவந்தார்கள் படையெடுத்து அடக்கி விடுவதையே தங்கள் ஆளும் உரிமையாகக் கொண்டுள்ளனர். எடுத்துக்காட்டாக, ‘இராவண காவியம்’ என்ற ஒரு நூலை எழுதியதன் வாயிலாக அதன் ஆசிரியர், இராமாயணத்தைப் பற்றிய தம்முடைய கருத்தை வெளியிட்டார். இது, காந்தியார் வழி நடக்கும் ஆளவந்தார்களுக்குப் பிடிக்கவில்லை. உடனே அந்த நூலைத் தடை செய்து பறிமுதல் செய்துவிட்டனர். கருத்து மாறுபடுகிறது என்பதற்காக எவரையும் பகைத்துக்கொள்ளக் கூடாதென்று காந்தியார் கூறிய உபதேசம் காற்றில் பறக்கவிடப்பட்டது. ஆனால், காந்தியாரை அவதார புருஷரென்றும், அவர் காட்டியவழி நடப்பதே நம்முடைய கடமையென்றும் கூறுவதில் மட்டும் நமது மாகாண அமைச்சர்களிடம் மற்றவர்கள் பிச்சை வாங்கவேண்டிய அளவுக்கு மேலே போய்விடுகின்றனர்! இதுதான் ‘அவர் காட்டியவழி’ நடப்பதாகச் சொல்லிக் கொள்வதற்கு நற்சாட்சிப்பத்திரமா என்று ஆளவந்தார்களைக் கேட்கிறோம்.

கருத்து வேறுபாடு காரணமாக ஒருவரோடொருவர் பகைமை கொள்ளக் கூடாதென்பதை மேலும் வலியுறுத்தும் முறையில்,

“கருத்து மாறுபாடு இல்லாமல் இருந்த இரண்டு தனி மனிதர்கள் உலகில் இருந்தார்கள் என்பது எனக்குத் தெரியாது”

என்று காந்தியார் கூறியுள்ளார். எனவே ஒருவருடைய கருத்து இன்னொருவருடைய கருத்தோடு மாறுபடுகிறதே என்ற காரணத்துக்காக, அடக்கி ஆளும் அதிகாரம் தங்கள் கையில் இருக்கிறது—எதை வேண்டுமானாலும் செய்யலாம் —யார் கேட்பது—என்ற போக்கில் ஆளும் முறையை ஆக்கிக்கொள்வது அறிவுடைமையா? அல்லது அவர் காட்டிய வழி நடக்கும் நெறியா? என்று கேட்கிறோம். கருத்து வேறுபாடுகளைக் காரண காரியங்களைக் காட்டி விவாதித்து ஒரு முடிவுக்கு வர முடியாதவர்களன்றி, மற்றெவரும் கருத்து மாற்றங்களைக் கண்டு கலங்கித் தங்களைக் காப்பாற்றிக் கொள்ள வேண்டுமென்று சட்டத்தின் துணையை நாட மாட்டார்கள். ஒருவர் தம்முடைய கருத்தை—ஆராய்ச்சியால் கண்ட உண்மையை வெளியிடுகிறார் என்பதற்காக அவருடைய கருத்துக்குக் கதவடைப்புச் செய்வது, நாசிசம், பாசிசம், எதேச்சாதிகாரம் என்று சொல்லப்படும் கொடுங்கோலாட்சியின் கீழ்ப்பட்ட நாடுகளில் காணக் காண்பதரிதாகும். ஆனால் இங்கு—அன்பு, ஒற்றுமை, சத்தியம், அகிம்சை என்ற உயர்ந்த பண்புகளோடு நாட்டை ஆள்வதாகச் சொல்லிக்கொள்ளும் ‘நல்லவர்கள்’தாராளமாகவும் தங்கு தடையின்றியும் அந்தக் காரியத்தைக் காந்தியார் கூறிச் சென்ற கருத்துக்களின் நிழலில் நின்றுகொண்டே செய்கிறார்கள்.

காந்தியாரின் நினைவு நாளின் போது இந்நாட்டில் நடைபெற்ற நிகழ்ச்சிகளையும்,காந்தியார் மறைந்த ஓராண்டுக்குள் நடைபெற்ற ஒவ்வொரு நிகழ்ச்சிகளையும் ஒப்பு நோக்கிப் பார்க்கும் சந்தர்ப்பம் காந்தியாருக்குக்கிடைத்தால், “இந்தக் கொடுமைகளைக் காணவா சுயராச்சியத்தைப் பெற்றது? இவர்களை விட அவர்கள் எவ்வளவோ மேல்” என்று எண்ணி வருந்தாமல் இருக்க முடியாது.

காந்தியார், தம்முடைய கொள்கைகளும் திட்டங்களும் எங்கே கைவிடப்பட்டுவிடுமோஎன்றுஅஞ்சியதாலேயே அவர் தம்முடைய கண்பர்களுக்கு ஒரு வேண்டுகோளையும் விடுத்துச் சென்றுள்ளார்.

